தேடிக்காணப்பெறாது வருந்தும் அபயகுலசேகரசோழமகாராஜா வானவர், மேற்கூறிய நம்பிகள் மகிமைதெரிந்து, தமது நாட்டிலுள்ளார் யாவரும் இன்னதினத்தில் திருநாரையூர்க்கு நைவேத்தியவகையெல்லாங்கொண்டுவருகவென்றுஆஞ்ஞாபித்துத்தாமும் அத்தினத்தில் திருநாரையூர்க்கு வந்தனர். நாட்டிலுள்ளாரெல்லாம் அன்னவகை, மோதகவகை, எள்ளுருண்டை, அப்பம் முதலிய வகைகள் பற்பல கனி வகைகளெல்லாங்கொண்டுவந்து திருநாரையூரில்சூழப் பதின்காதவல்லைவரை பரப்பிவைத்தார்கள்.

அரசர், நம்பிகளை வணங்கி இவையெல்லாம் விநாயகப்பெருமானுக்கு நிவேதித்தருளுகவென்று வேண்டினர். நம்பிகள் அவை முழுதும் மந்திரபூர்வகமாக நிரீக்ஷணாதிகளாற் சுத்திசெய்து நிவேதிப்ப, விநாயகர் துதிக்கை நீட்டி எடுத்து முழுதும் உண்டருளினர். அரசர், அவ்வற்புதங்கண்டு மகிழ்ந்து நம்பிகளைவணங்கி, எம்பெருமானே தேவாரத்திருமுறைகளும், திருத்தொண்டர் சரித்திரங்களும்உலகெங்கும் விளங்கவேண்டுமென்று பிரார்த்தித்தனர். நம்பிகள், விநாயகர் திருமுன்பணிந்துவேண்டி, அவர் தெரிவிப்பத் தெரிந்துவந்து, அரசரே திருமுறைகள், சிதம்பரத்திற் சிற்சபையின் புறத்துள்ள அறைகளில், சம்பந்தர், அப்பர், சுந்தராகிய மூவருடைய கையடையாளம் வைக்கப்பட்டிருக்கின்றன. திருத்தொண்டர் சரித்திரங்கள் இவை என்று தமக்கு விநாயகர், திருத்தொண்டத்தொகைப் பொருள் விரித்தருளியபடி விளக்கியருளிச் சிவபிரானருளிய ஆரியவேதங்கள் கைகாணா மந்திரங்களாகும். மூவாருளிய தேவாரங்களாகிய செந்தமிழ்ச் சிரியவேதங்கள் கைகண்ட திருமந்திரங்களாகுமென்று மேலுந் தேவார மகிமைகளைச் செவ்வேதெரிவித்து, அத்தேவாரங்கள், திருஞானசம்பந்தர்திருப்

பதிகம் பதினாறாயிரமும், திருநாவுக்கரசர் திருப்பதிகம் நாற்பத்தொன்பதினாயிரமும், சுந்தரமூர்த்திகள் திருப்பதிகம் முப்பத்தோராயிரமுமாக ஒருலக்ஷத்திரண்டாயிரந் திருப்பதிகங்களுள்ளன வென்று விளக்கியருளினார். அரசர் மிகமகிழ்ந்து நம்பிகளுடன் சிதம்பரத்துக்குவந்து சிற்சபேசர் திருமுன்பணிந்து துதித்தனர். நம்பிகள் அன்புபெருக முன்புபணிந்து கோயிற்பண்ணியர் விருத்தம் பாடித்துதித்தனர். அரசர், தில்லைவாழந்தணர்களை நோக்கித் திருநாரையூர்ப் பொல்லாவிநாயகர் கனகசபையின் மேற்றிசை அறைகளுள்ளே தேவாரத் திருமுறைகளிருக்கின்றன வென்றருளினர். அவைகளை எடுத்தல் வேண்டுமென்றனர். அந்தணர்கள், அரசரே அத்திருமுறைகள், அவற்றைப் பாடியருளிய மூவரால், அந்நாளில் அவ்வறைகளுள் வைக்கப்பட்டு அவ்வாயிலில் அவர்கள் திருக்கையடையாளமுஞ் சேர்த்திருத்தலால், அதனைக் கடந்து நாம் திறத்தல் கூடுமா? அம்மூவரும் வந்தால் அவ்வறைகள் திறக்கப்படுமென்றார்கள். அரசர் அதற்கமைந்து, சிற்சபேசர்க்கும் சமயாசாரியர்க்கும் விசேஷபூசை செய்வித்து சமயாசாரியர்மூவரையும் திருவீதியில் எழுந்தருளச் செய்துகொண்டு கோயில் வலமாக அவ்வறைமுன் வந்துநின்று இனி அறை திறக்கலாமே என்றனர். அந்தணர்கள் அரசரது ஆழ்ந்து நோக்கும் புத்திநலத்தையும் அருளையே நோக்கும் பத்திவலத்தையும் வியந்து பாராட்டி. அம்மூவரை வணங்கி அவராணை வேண்டிப்பெற்று அவ்வறைகளை திறப்பிக்க, அரசர் உள்ளிருந்த திருமுறைகளை வன்மீகமூடியது கண்டு வருந்தி, அம்மண்ணைப் புறத்தில் மெல்ல ஒதுக்கி, உள்ள ஏடுகளும் பழுதுபடாவண்ணம் எங்கும் எண்ணெயால் அபிஷேகித்து நனைந்தபின் சாவதானமாக எடுத்து, மிகுந்த திருப்பதிகங்

கள் கறையானால் மறைந்தமைநோக்கி மிகவருந்தி, விழிநீர் பெருக மனங்கசிந்துருகத் திருவருளை வேண்டி நின்றனர். அப்போது திருவருளால் தேவாரங்களை மண்மூடச்செய்து இக்காலத்துக்கு வேண்டிய மாத்திரம் வைத்தோமென்று யாவருங்கேட்க ஆகாயவாக்கெழுந்தது. அதுகேட்டு அரசர் கவலை நீங்கி நம்பிகளை வணங்கி இத்திருமுறைகளை முன்போல வகுத்தருளுகவென்று வேண்டினர்.

நம்பிகள், திருவருள் இக்காலத்துக்குவேண்டியமட்டில்வைத்துள்ள திருஞானசம்பந்தர் திருப்பதிகங்கள் முந்நூற்றெண்பத்துநான்கையும் மூன்று திருமுறைகளாகவும், திருநாவுக்கரசர் திருப்பதிகங்கள் முந்நூற்றுப்பன்னிரண்டையும் மூன்று திருமுறைகளாகவும், சுந்தரமூர்த்திகள் திருப்பதிகங்கள் நூற்றொன்றையும் ஒரு திருமுறையாகவும், ஆகத் திருப்பதிகங்கள் எழுநூற்றுத்தொண்ணூற்றேழையும், ஏழுகோடி மகாமந்திரங்களே என்ன, ஏழுதிருமுறைகளாக வகுத்தருளி, அதன்மேல் திருவாசகமுந் திருக்கோவையாரும் எட்டாந் திருமுறையாகவும், திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டும் ஒன்பதாந் திருமுறையாகவும், திருமூலர் திருமந்திரம் மூவாயிரமும் பத்தாந்திருமுறையாகவும், திருவாலவாயுடையாரருளிய திருமுகப்பாசுர முதலியவைகளைப் பதினோராந்திருமுறையாகவும், ஈசானாதிய பதினொரு திருமந்திரங்களென்னும்படி வகுத்தருளினர். அரசர் அம்முறைநோக்கி மகிழ்ந்துநம்பிகளை மேலும் பணிந்து எம்பெருமானே தேவரீர் பாடியிருக்கின்ற நூல்களுடன் பொல்லாவிநாயகர் முகமாகத் திருத்தொண்டத்தொகைப்பொருள் கேட்டு அடியேனுக்கு விளக்கியருளிய திருத்தொண்டர் சரித்திரங்களை ஒரு நூலாகப்பாடியருளி அதனையும்